# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – தை

2022 – ஜனவரி



115

12.01.2022 அன்று கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்ற சமத்துவப் பொங்கல் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ - தை

2022 - ஜனவரி இதழ் - 115



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்

# இறை வணக்கம்




மானோக்கி மலர்முகத்தள் கழனி வாசல்
மதுநதியாள் மரகதத்தாள் கோவிலூரின்
மங்கலப்பெண் திருநெல்லை மாது காண
மடம்வைத்த ஆண்டவரின் மரபில் வந்தார்
தானோக்கி வணங்கிஅவள் வழியே நின்று
தலைவணங்கும் மெய்யப்ப சாமிக் கிங்கே
தான்வந்த பிணிபோக்கும் தாயே ஆகித்
தான்காத்தாள் தளிரடிகள் போற்றி போற்றி
வானோக்கி மழைவேண்டும் பயிரைப் போல
வந்துனது திருமுன்பு வணங்கு வாரை
வாழவைக்கும் பெருங்கருணைத் தாயே உன்னை
வணங்கியடி தொழும்சாமி நீடு வாழ
நீநோக்கி அருள்புரிக நின்னை எங்கள்
நெஞ்சமெனும் கருவறைக்குள் நிலையாய் நின்று
நினைத்தாரைக் காப்பதுன்றன் கடனே அன்றோ
நித்திலமே திருநெல்லை நீயே காப்பு !

*– காப்பியக் கவிஞர் நா. மீனவன்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

***மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல்.***

புராண இதிகாச காலங்களிலிருந்து மகன் தந்தை உறவு எவ்வாறு இருந்தது. தந்தையிடம் மரியாதையாக நடந்துகொண்ட மக்கள், தந்தை சொல்மிக்க மந்திரம் இல்லை என்று உணர்ந்து பணிந்து வணங்கி நடந்த மக்கள். இவர்களைப் பற்றியும் பெற்றோரை மதியாது அவர் சொல் கேட்காது முரண்டுபிடித்து மாற்றுவழியில் நடந்து சமயங்களில் தீயசெயல்களில் ஈடுபட்டு இடர்ப்பட்ட மக்களைப் பற்றியும் நாம் படித்து இருக்கிறோம்.

தந்தை தாய் சொல் தட்டாத இராமரைப் பற்றியும் சம்பிரதாயத்திற்கு மாறாக நீதிமுறைகளுக்கு எதிராக தன்னைப் பட்டம் சூட்டிக்கொள்ள ஆணையிட்ட அன்னை கையேயியின் சொல் மறுத்து துறவறம் பூண்டு இராமரின் பாதுகையை மன்னராகக் கொண்டு ஆட்சி புரிந்த பரதனைப் பற்றியும் படித்து இருக்கிறோம். தசரதச் சக்கரவர்த்தி சாகும் தருவாயில் கைகேயி என் மனைவி அல்லள், பரதன் எனக்கு மகனும் இல்லை என்று சொன்ன உறுதியின் காரணமாக, தசரதசக்கரவர்த்திக்கு ஈமச்சடங்கைச் செய்யும் வாய்ப்பை முதல் மூன்று புதல்வர்களும் இழந்துவிட இளைய மகனான சத்ருக்கணன் ஈமச்சடங்குகளைச் செய்தான் என்பது இராமாயணம். இங்ஙனம் உத்தம புதல்வர்களாக இருந்தும் தந்தையின் ஈமச்சங்கை செய்ய இயலாதவர்களைப் பற்றியும் படித்து இருக்கிறோம்.

இதுபோல, பலப்பல இதிகாச புராணங்கள் வரலாற்றுச் செய்திகள் மூலம் தந்தை மக்கள் உறவை நாம் அறிந்திருக்கிறோம்.

இந்த 21ஆவது நூற்றாண்டில் தந்தையின் புகழைத் தந்தை இறந்துபோன நிலையிலும் பெரும் பொருட்செலவில் ஆண்டுதோறும் நாள் தோறும் கொண்டாடுகிற மக்களை நாம் அண்மையில் பார்த்து வியப்புற்றோம், ஆனந்தம் அடைந்தோம்; ஆசி வழங்கினோம்.

நெற்குப்பை கிராமத்தில் 1921 பிப்ரவரி 11ஆம் தேதி உதித்த சோம.லெட்சுமணன், சோமலெ என்று பரவலாக அறியப்பட்ட அற்புதமான எழுத்தாளர் பெருமானுக்கு ஆண்டு தோறும் விழா எடுத்து நூற்றுக்கணக்கான பச்சிளம் சிறார்களுக்கும் அவர்கள் ஆசிரியர்களுக்கும் அன்னதானம் வழங்கி அக்குழந்தைகள் நன்கு கற்று வளர ஊக்கமும் அளித்துச் சிறப்பிக்கின்ற சோமலெயின் திருமகனார் சோமசுந்தரம் அவர்கள் நம்மையும் பேராசிரியர் முனைவர் கரு.முத்தையா அவர்களையும், மதுரை மாவட்ட பாராளுமன்ற உறுப்பினர் சு.வெங்கடேசன் அவர்களையும், மதுரை மாவட்ட உயர்கல்வி அலுவலர் உயர்திரு. சுவாமிநாதன் அவர்களையும், மாவட்ட நூலக அலுவலர் அவர்களையும் சிங்கம்புணரிக்கு அருகில் உள்ள (கீழவளவிற்கு அருகில் உள்ள) வேப்பனையம்பட்டி என்ற கிராமத்தில் சோமலெ அவர்களால் கட்டப்பட்ட (சோமலெ தன் தந்தையின் ஞாபகார்த்தமாக) சோமசுந்தர விநாயகர் திருக்கோவில் வருஷாபிஷேக விழாவிற்கு அழைத்தார்கள். நாமும் சென்று கலந்து கொண்டோம். அந்த வேப்பனையம்பட்டி மிகச்சிறிய குக்கிராமம்; அதிலே உள்ளது சோமசுந்தர விநாயகர் திருக்கோவில். இந்தத் திருக்கோவில் மூன்று கால பூஜை தொடர்ந்து நடந்துவர திரு. சோமசுந்தரம் அவர்கள் ஏற்பாடு செய்துள்ளார்கள். மேலும் வேப்பனையம்பட்டி, மலம்பட்டி, செருக்கம்பட்டி ஐந்து சுற்றுவட்டார கிராமங்களில் இருந்து குழந்தைகளை ஞாயிறு தோறும் வரவழைத்து நூல்கள் வழங்கி அந்தக் குழந்தைகள் நூல்களைப் படித்து அடுத்து ஞாயிற்றுக்கிழமை அதன் சாரத்தை உரைக்க வேண்டும்; பாடவேண்டும். இந்த நடைமுறை ஆண்டாண்டு காலமாக நடந்து வருகிறது. அந்தக் கோவில் வரைக்கும் நெடுஞ்சாலை 2 கி.மீ தூரத்திலிருந்து தன் சொந்தச் செலவில் திரு. சோமசுந்தரம் அவர்கள் போட்டுள்ளார்கள் என்பதை அறிந்து மிக்க வியப்புற்றோம்.

எனவே இந்தக் கோவிலை புத்தக விநாயகர் கோவில் என்று பொதுமக்கள் அழைக்கிறார்கள்.

அமெரிக்காவில் பணிபுரிகின்ற சோமசுந்தரம் சௌந்தரம் ஆச்சி தம்பதியர் ஆண்டு தோறும் தவறாமல் வந்து விழா எடுக்கிறார்கள்.

தொடர்ந்து முன்னேற்றத்திற்கான ஏற்பாடுகளையும் பெரும் பொருட்செலவில் செய்கிறார்கள். இப்பொழுது அந்தக் குக்கிராமத்தில் இளம்பிள்ளைகள் கற்பதற்காக, கணினி மையம், ஒரு செம்மையான நூலகம், வேலை வாய்ப்பிற்கான தொழிற்கல்வி அனைத்திற்கும் ஏற்பாடு செய்ய உள்ளார்கள்.

சோமலெ அவர்கள் பெரும் புகழ்பெற்ற நூலாசிரியர், பயணக்கட்டுரையாளர், விழாமலர் தொகுப்பாளர், கும்பாபிஷேக மலர் தொகுப்பாளர் என்ற பன்முகத்திறமை கொண்ட முதுபெரும் எழுத்தாளர்; எனினும் கடைசிவரை எளிமையாகவே வாழ்ந்து இறைவனடி சேர்ந்தவர்கள். அவர் மகனும் மருமகளும் பெரும் பொருள் சம்பாதிக்கின்ற பணியில் இருந்தாலும் மிக எளிமையாக அடக்கமாக எல்லோருக்கும் நல்லவர்களாக விளங்குகிறார்கள். இது அதிசயத்திலும் அதிசயம் ஆகும். சோம சுந்தரத்தின் முதன்மைப் பணி தந்தையின் புகழ் பரப்புவதே. இத்தகைய திருமகனாரைப் பெற்ற சோமலெ அவர்கள் என்ன தவம் செய்தாரோ என்று வள்ளுவர் போல நாமும் ஆச்சரியப்படுகிறோம்! ஆனந்தம் அடைகிறோம்.

இதைப் போலவே தன்னுடைய வாழ்நாள் முழுவதும் தந்தையின் புகழைப் பரப்புவதற்காகப் பாடுகின்ற இவர் இலக்கியச் செம்மல், குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அவர்களின் மகளான தெய்வானை என்கிற தேவி நாச்சியப்பன். இந்த அரும்செயல் செய்யும் மக்களால் இவர்களுடைய பெற்றோர் மனமகிழ்ச்சி அடைவார்கள். அவர்களுடைய ஆன்மா இவர்களை நன்கு நலமுடன் வளமுடன் வாழ ஆசிர்வதிக்கும். நாமும் இவர்களை நமது குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லல்

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

அத்தை மகன் மாரீசன் உபதேசங்கள் ஏதும் காதில் ஏறாத இராவணன் மாரீசனை, பொன்மான் வேடம்பூண்டு இராம இலக்குவனை அழைத்துச் சென்றுவிட வற்புறுத்தினான். வற்புறுத்தலுக்கு உட்பட்ட மாரீசனும் உலகில் கண்டறியாத அழகுடன் பொன்மான் உருவம் கொண்டு பஞ்சவடி சேர்ந்தான்.

பொன்மான் அழகைக் கண்டு வியந்த மாதரசி சீதை மானை நான் விளையாடப் பிடித்துத் தாருங்கள் என்று சிறு பெண்ணைப் போலப் பிடிவாதம் பிடித்துக் கெஞ்சினாள். சீதையின் அசட்டுத் தனத்தை ரசித்துக் கொண்டே மானைப் பிடிக்க மாதவன் ஏகினான். செல்லும் பொழுது சீதா பிராட்டியைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளும்படி இளவல் இலக்குவனிடம் சொல்லிச் சென்றான். பொன்மான் வேடம் கொண்ட அரக்கன் இராமனுக்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டே வெகுதூரம் அழைத்துச் சென்றுவிட்டான். ஏனோ தெரியவில்லை; மானை நோக்கி உடனடியாக அம்பை எய்திக் கொல்லாமல் விளையாட்டுக் காட்டி வளைந்து ஓடும் மானைத் துரத்திக் கொண்டு ஓடிக்கொண்டிருந்தார் என்பது இராவணனுடைய அழிவிற்காகவே இந்த விந்தையான விளையாட்டை இராமர் நடத்தினாரோ என்று ஐயம் எழுகிறது. அதே நேரம் மாரீசன் இராமனுடைய குரலிலே லெட்சுமணா என்று அலறினான், இராமபிரானுடைய குரல் லெட்சுமனை அழைத்தவுடன் இராமபிரானுக்கு ஏதோ ஆபத்து என்ற கற்பனை சீதையின் பேதை மனதில் உதித்தது. உடன் இலக்குவனை நோக்கி உங்கள் அண்ணாவின் அலறும் குரல் கேட்கிறது; ஓடிப்போய்ப் பாருங்கள் என்று வபுறுத்தினாள். இலக்குவன் இராமனுடன் இணைபிரியாது வாழ்ந்து வந்த தம்பி என்பதனால் அச்சமோ கவலையோ கொள்ளவில்லை. இராமபிரானின் வீரத்தில் ஆழமான நம்பிக்கை கொண்ட இலக்குவன் இராமபிரானை எவராலும் வெல்ல முடியாது அழிக்க முடியாது என்ற நம்பிக்கையால் அசையாமல் நின்று சீதா பிராட்டிக்கு என் அண்ணன் இராமபிரானை யாரும் வெல்ல முடியாது, அவர் யாருக்கும் அஞ்சி அலறிக் கதறமாட்டார். இது ஏதோ மாயக்குரல்; அஞ்சாதீர்கள் என்று சமாதானம் கூறினான். சீதாபிராட்டியோ

*ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்*
*பெரு மகன் உலைவுறு பெற்றி கேட்டும், நீ*
*வெருவலை நின்றனை வேறு என்? யான், இனி*
*எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென், ஈண்டு* என்றாள்.

தீப்புகுந்து உயிர் விடுவேன் என்று அழுகையோடு சொன்ன வார்த்தையைக் கேட்டு இலக்குவன் மானும் இராமனும் சென்ற திசையில் சென்றான். உங்களுடைய அச்சத்திற்கு அஞ்சியும் சொல்லை மதித்தும் செல்கின்றேன். வெஞ்சின விதியை வெல்ல வரலாமோ என்று கூறிப் புறப்பட்டான். பஞ்சவடிக்கு அருகில் வாழ்ந்து வரும் ஜடாயு எப்படியும் சீதைக்கு அரணாக இருப்பான் என்ற நம்பிக்கையில் சீதையைத் தனியாகவிட்டு நகர்ந்தான்.

இந்தக் காட்சியில் இந்த இடத்தில் வால்மீகி இலக்குவன் தன்னை அடையும் துர்நோக்கத்தோடு இராமன் இறக்கட்டும் என்று இலக்குவன் எண்ணுகிறான் என்ற கருத்தில் அசையாமல் தன் அருகில் நிற்கின்றான் என்ற கருத்தில் இழிவான சொற்களைப் பிரயோகித்தாள் என்று சீதைக்கு ஒரு சிறு களங்கம் ஏற்படுத்திவிடுகிறார் வால்மீகி. அதனைச் சினவயப்பட்டாள் என்று மட்டும் கூறி இலக்குவன் அகன்றதைக் கம்பர் கூறுகிறார்.

இலக்குவன் அப்புறம் அகன்றதும் காலங்காலமாகத் தவம் செய்து ஞானம் பெற்ற பிரம்மரிஷி போல் வேஷம் பூண்டு இராவணன் பர்ணசாலையை அணுகினான். யாரோ தவயோகி தங்கள் குடிலுக்கு வருகிறார் என்று உண்மையாக நம்பி மகரிஷியை வணங்கி வரவேற்று ஆசனம் வழங்கி அமர வைத்தாள். ஆனால் இராவணனோ இப்படிப்பட்ட அபூர்வமான அழகுடைய பெண்ணைத் தனக்கு அளிக்க முயன்ற தன் தங்கைக்கு அரசையே வழங்கினாலும் போதாது என்று நன்றி உணர்வாலும் காம உணர்வாலும் உள்ளூரக் காமத் தீ எழ அமர்ந்தார்.

அணங்கே நீ யார் என்று வினவிய இராவணனுக்குத் தான் யார் என்று விளக்கிய சீதையின் சொற்களும் தான் யார் என்பதை விளக்கிட இராவணன் அளந்த கதைகளும் மெய்மைக்கும் பொய்மைக்கும் உதாரணங்களாகக் கம்பன் கவிநயத்தோடு விளக்குகிறார்.

*அனகமா நெறிபடர் அடிகள்! நும்அலால்*
*நினைவதோர் தெய்வம்வே றிலாத நெஞ்சினான்*
*சனகன்மா மகள்; பெயர் சனதி; காகுத்தன்*
*மனைவியான் என்றனள் மறுவில் கற்பினாள்.*

*சீதையின் கூற்று*

*வெம்மைதீர் ஒழுக்கினன்; விரிந்த கேள்வியன்*
*செம்மையோன்; மன்மதன் திகைக்கும் செவ்வியன்*
*எம்மனோர் அனைவரும் இறைவன் என்(று) எனும்*
*மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான்.*

இந்த நேரத்தில் விளையாட்டுக் காட்டியதும் விளையாடியதும் போதும் என்று எண்ணிப் பொன் மானைத் தன் வில்லால் அம்பு எய்ததும் மாரீசன் அலறிக் கொண்டே மாய்ந்தான். எப்பொழுதும் இராமன் திரும்பி வந்துவிடுவான் என்று எண்ணிய இராவணன் உடனடியாகச் சீதையைக் கவர எண்ணினான். மூவுலகாளும் என்னை ஒதுக்கி கேவலம் மானுடனுடன் வாழ எண்ணிதியோ என்று சொல்ல, சீதை மனத்தை மாற்ற எண்ணினான். சீதாபிராட்டி இராமனின் வீரத்தைப் பலவிதமாக எடுத்துக் கூறினாள். என்னைக் கவர்ந்தால் நீ அழிவாய் என்று எச்சரிக்கை செய்தும் மனம் மாறாது.

*குலைவுறல் அன்னம்! முன்னம் யாரையும் கும்பிடாஎன்*
*துலைமிசை மகுடம் என்னத், தனித்தனி இனிது தாங்கி*
*அலகில்பூண் அரம்பை மாதர் அடிமுறை ஏவல் செய்ய*
*உலகம் ஈரேழும் ஆளும் செல்வத்துள் உறைதி!* என்றான்.

சீதை எதற்கும் கலங்காது இராவணன் தன்னை அடைய முடியாது. இராமன் வீரம் தன்னைக் காக்கும் என்று கலங்காது நின்றாள். உடனே பர்ணசாலை நிலம்கீறி குடிலோடு சீதையையும் பெயர்த்து ரதத்தில் இலங்கை நோக்கிப் பறந்தான்.

*ஆண்டா யிடைதீ யவன், ஆ யிழையைத்*
*தீண்டான் அயன்முன் உரைசிந் தைசெயா*
*தூண்தான் எனலாம் உயர்தோள் வலியால்*
*கீண்டான் நிலம்யோ சனைகீழ்ப் புடையே என்கிறார் கம்பர்.*

பிரம்மன் அளித்த சாபத்தை எண்ணிச் சீதையைத் தீண்டாது பர்ணசாலையோடு தூக்கிச் சென்றான் என்றார் கம்பர். வால்மீகியோ சீதை கதறக் கதற அவள் இருகரங்களையும் கட்டி இழுத்துச் சென்று தேரில் ஏறிப் பறந்தான் என்கிறார். சீதையின் குணநலனைப் போற்றவும் இராவணன் சாபத்திற்குப் பயந்து அச்சக் குணத்தைக் காட்டவும் கம்பர் மாயத்தால் பர்ணசாலையைத் தோண்டி, சீதையோடு பர்ணசாலையை விமானத்தில் ஏற்றிப் பறந்தான் என்று இருவருடைய குணச்சித்திரங்களையும் தவறில்லாமல் வரைந்து இருக்கிறார் கம்பர்.

*(தொடரும்...)*

## ஓம் நமோ நாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 16. திருக்கண்ணமங்கை

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி

108 திவ்ய தேசங்களுள் பதினாறாவது திவ்ய தேசம், திருக்கண்ணமங்கை. சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பதினாறாவது திருத்தலமாகும். இத்தலம் கும்பகோணத்தில் இருந்து திருவாரூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இத்தலம் கிருஷ்ணாரண்ய தலங்களில் ஒன்றாகும். பெருமாளுக்கும் பிராட்டிக்கும் திருமணம் நடந்த தலமாதலால், இத்தலம் கிருஷ்ண மங்கள ஷேத்திரமாகும்.

இத்தலத்தில் விமானம், மண்டபம், ஆரண்யம், ஷேத்திரம், தீர்த்தம், ஆறு, நகரம் ஆகிய ஏழு லட்சணங்களும் ஒருங்கே அமையப்பெற்று மரணமில்லா வாழ்வைத் தரும் அமிர்தத்தின் சிறப்பைக் கொண்டு அமைந்துள்ளதால், இத்தலம் சப்தாமிர்தத் தலம் என அழைக்கப்படுகிறது.

விமானம் – உத்பல விமானம்

மண்டபம் – வேத மண்டபம்

ஆரண்யம் – கிருஷ்ண ஆரண்யம்

ஷேத்திரம் – கிருஷ்ண மங்கள ஷேத்திரம்

தீர்த்தம் – தர்சன புஷ்கரணி (கண்களால் தரிசனம் செய்த மாத்திரத்தில் பாவ விமோசனம் தரக்கூடிய தீர்த்தம்)

ஆறு - விருத்த காவேரி எனப்படும் வெட்டாறு
நகரம் - கண்ணமங்கை மாநகர்

பெருமான் பாற்கடலைக் கடைந்த போது, மஹாலெஷ்மி அவதரித்தார். லெஷ்மியின் அழகிய உருவத்தைக் கண்டு அவரை மணக்க நினைத்தார். ஆனால், பாற்கடல் கடைந்த தோற்றத்துடன் இருந்த பெருமானின் நிலைகண்டு, மிகவும் நாணமுற்றாள். அவரை நேரில் பார்க்க மிகவும் வெட்கப்பட்டாள். அதனால் திருமாலை மணப்பதற்கு ஏற்ற தலமாக திருக்கண்ணமங்கையைத் தேர்ந்தெடுத்து, பாற்கடல் கடைந்த கோலத்துடன் இருந்த பெருமானின் தோற்றத்தைக் கண்ணுள் கொண்டு, எம்பெருமானைக் குறித்து தர்சன புஷ்கரணிக் கரையை அடைந்து மௌன தவம் இருக்கலானாள். அவள் தவமிருந்த வனம் லெஷ்மி வனம் ஆயிற்று.

அவரின் தவத்தை மெச்சிய திருமால், உத்பலாவதகம் என்ற விமானத்தில் ஏறி, தர்சன புஷ்கரணி கரைக்கு வந்தார். கரையின் மேல் திசையில் நின்று கொண்டு, கீழ்த்திசையில் தவம் செய்த லெஷ்மியைக் கண்டார். தனது மெய்க்காவலரான விஷ்வக்சேனரிடம் முகூர்த்த நாள் குறித்துக் கொடுத்தனுப்ப, விஷ்வக்சேனர் அதைக் கொணர்ந்து பிராட்டியிடம் சேர்ப்பித்தார். திருமாலின் இங்கிதத்தைக் கண்டு மகிழ்ந்த லெஷ்மி, பெருமாளிடம் தோழிகள் சகிதமாக வந்து வணங்கினார்.

பின் முப்பத்து முக்கோடி தேவர்களும், ரிஷி முனிகளும் புடைசூழ, திருமாலின் மணநிகழ்வைக் காண இத்தலம் வந்து சேர்ந்தனர். ஆனால், அச்சிறிய இடத்தில் அத்தனை பேரும் எப்படி நிற்பது? அதனால், முப்பத்து முக்கோடி தேவர்களும் சிறு தேனீக்களாக உருவெடுத்து, பக்தவச்சலப் பெருமாள், மஹாலெஷ்மியை மணம் செய்து கொள்வதைக் காணத் தயாராயினர். பின்னர், பெருமான் இனிதே திருமகளை இத்தலத்தில் மணம் புரிந்தார். இங்குள்ள
மூலவர் - பக்தவத்சலப் பெருமாள் என்னும் பத்தராவிப் பெருமாள்
உற்சவர் - பெரும் புறக்கடல்
தாயார் - கண்ணமங்கை நாயகி என்னும் அபிஷேகவல்லித் தாயார்
தீர்த்தம் - தர்சன புஷ்கரணி
விமானம் - உத்பலாவதக விமானம்
தலவிருட்சம் - மகிழமரம்
கோலம் - கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம், பிரம்மாண்டத்

திருவுருவம்; இங்குள்ள கருடாழ்வாரும் நின்ற திருக்கோலத்தில் பிரம்மாண்டமாக அருள்புரிகின்றார். அனைத்துக் கோவில்களிலும், நான்கு திருக்கரங்களுடன் காட்சிதரும் விஷ்வக்சேனர், இத்தலத்தில் இரண்டு கரங்களுடன் காட்சி தருகின்றார்.

நாலாயிரத்திவ்ய பிரபந்தத்தைத் தொகுத்த நாதமுனிகளுக்குத் திருக்கண்ணமங்கை என்ற சீடர் ஒருவர் இருந்தார். இவ்வூரில் பிறந்த இவர் பெருமாளிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். கோயிலைச் சுத்தம் செய்து பெருமாளே அடைக்கலம் என்று இருந்தார். ஒருநாள் இவர் வேதபாராயணம் செய்து கொண்டே, விலங்கைப் போல நாலு கால்களால் கூட்டத்தின் நடுவே நடந்து வந்து கோயிலைச் சுற்றி வந்து, கோயிலுக்குள் உள்ளே சென்று, துவார பாலகர்களுக்குத் தண்டம் சமர்ப்பித்துவிட்டு, மூலஸ்தானத்திற்குள் ஓடி ஜோதியாகி இறைவனுடன் கலந்தார். இன்றும் ஆனி மாதம் திருவோண நட்சத்திரம் இவரின் மகா நட்சத்திரமாகக் கொண்டாடப்படுகின்றது.

என் அய்யா, காப்பியக் கவிஞர், நற்றமிழ் நாவலர் கவிஞர் கோ. நா.மீனவனார் திருக்கண்ணமங்கை குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. பாலுக்குள் நெய்யாய் இருப்பவன், பண்ணுக்குள் இசையாய் இருப்பவன், காலடிக்குள் சொர்க்கத்தைக் காட்டுபவன், அரங்கன் என்கின்ற மாலவன். அவன் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற திருக்கண்ணமங்கை பால் சென்று, அவனைப் பணிந்தேத்துவோம்; வாருங்கள் என அழைக்கும் முதற்பாடல் :

*பாலுக்குள் நெய்யானான் பண்ணுக்குள் இசையானான்*
*காலடிக்குள் பரமபதம் காட்டுதிரு அரங்கனெனும்*
*மாலவனும் நண்ணி மகிழ்ந்ததிருக் கண்ணமங்கை*
*பாலடுத்தே நாம்பரவிப் பணிந்தேத்த வாருமினே.*

2. பெருமாள் தாயார் திருக்கல்யாணத்தைக் காண வந்த முப்பத்து முக்கோடி தேவர்களும் தேனீக்களாக உருவெடுத்து, எப்போதும் இத்திருக்கோலத்தைக் கண்டு கொண்டே இருக்க வேண்டும் என்பதற்காக, தாயார் சன்னதியின் அர்த்த மண்டபத்தின் தெற்கு வடக்கு சுவர்களில், செவ்வக வடிவில் உள்ள சாளரத்தில், தேன்

கூடுகளைக் கட்டி, அதிலிருந்து கொண்டு தினமும் கண்டு மகிழ்கின்றனர். இந்தக் கூட்டினைச் சுற்றி வாழும் தேனீக்கள் இங்கு தரிசனம் செய்ய வரும் எவரையும் ஒன்றும் செய்வதில்லை.

முப்பத்து முக்கோடித் தேவர்கள் பணிய அருள் செய்த எம்பெருமானை, மூவுலகும் அளந்தவனை திருக்கண்ணமங்கையில் வீற்றிருக்கத் தகுதி பெற்றவனை, கருங்கடலில் இருப்பவனைத் தலையாரப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல் :

*எக்கோடி இருப்பவரும் இனியவராம் முப்பத்து*
*முக்கோடி தேவர்களும் முன்பணிய அருள்செய்தான்*
*திக்கோடு வானளந்தான் திருக்கண்ண மங்கைவளர்*
*தக்கோனைக் கருங்கடலைத் தலையாரப் போற்றுமினே.*

3. எம்பெருமானின் உயர்வை எப்பொழுதும் பாராட்டுகின்ற திருமங்கை ஆழ்வார், இத்தலத்திற்காகப் பாடிய 14 பாசுரங்களை மாலைகளாகச் சூடிக்கொள்பவன், மணக்கும் துளவமாலையை அணிந்திருப்பவன், மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் திருக்கண்ணமங்கை வந்து தொழுபவர்களுக்கு, அவர்தம் தீவினைகள் வாராமல் விலகி விடும் என்று கூறும் மூன்றாம் பாடல் :

*ஒருமங்கை உடனுறைவான் உயர்வினையே பாராட்டும்*
*திருமங்கை மன்னன்சொல் திருமாலை சூடியவன்*
*மருமணக்கும் துளவத்தான் மகிழ்ந்த்திருக் கண்ணமங்கை*
*வருபவர்தம் தீவினைகள் வாராது விலகிடுமே.*

4. மஹாலெஷ்மியை அடைவதற்காக எம்பெருமான் தன்னுடைய பாற்கடலை விட்டு, புறத்தே வந்து இங்கு எழுந்தருளியுள்ளதால், பெரும்புறக்கடல் என்பதே இறைவன் திருநாமம். தர்சன புஷ்கரணியின் நீரெடுத்து, பிராட்டிக்கு பட்டமகிஷியாக, பகவான் அபிஷேகம் செய்ததால், தாயார் அபிஷேகவல்லி எனப்படுகிறார். மூவுலகை அளந்த திருமால், பெரும்புறக்கடல் என்ற பேர் கொண்டு, அபிஷேகவல்லிப் பிராட்டியைத் தன் மார்பில் வைத்து மகிழ்கின்ற மணவாளனை, அர்ஜுனனின் தேரோட்டியை, நம் நெஞ்சில் இருக்கின்ற அழகுதிருப் பரந்தாமன் பாதங்களைப் பணியச் சொல்லும் நான்காம் பாடல் :

*பேருலகம் அளந்தமால் பெரும்புறக் கடலென்னும்*
*பேருடையான் அபிடேக வல்லியெனும் பெருமாட்டி*
*மார்பிருக்கத் தான்மகிழும் மணவாளன் பல்குணனின்*
*தேரோட்டி நம்நெஞ்சத் திருக்கோட்டி தாள்பணிமின்*

5. பாற்கடலைக் கடைந்த பொழுது வெளிவந்த கற்பகமரம், காமதேனு, சிந்தாமணி போன்ற பொருட்கள் இருக்கின்ற தேவலோகத்தின் காவலனான இந்திரனுக்கு அரச பதவி தந்த இறைவனை, அரவணையாகிய பாம்பின் நிழலில் துயில்பவனை, முற்பிறப்பின் தொடர்ச்சிகளை அகற்றும் திருக்கண்ணமங்கையில் வீற்றிருக்கும் அற்புதமானவனின் திருவடிகளைத் தினமும் வணங்கச் சொல்லும் ஐந்தாம் பாடல் :

*கற்பகக்கா தேனுமணிக் காவலர்க்கே அரசுதந்த*
*தற்பரனை அரவரசன் தலைநிழற்கீழ் துயில்வானை*
*முற்பவத்தின் தொடரகற்ற முனைந்ததிருக் கண்ணமங்கை*
*அற்புதத்தின் திருவடியை அனுதினமும் வணங்குதிரே*

இனிமையான இசைக்குள் இன்பமும், பாலுக்குள் நெய்யும் மறைந்திருப்பதைப் போன்று திருமாலின் உருவத்தினையே அருவமாய்க் கொண்டிலங்கும் வெட்ட வெளியினை, பேரொளியினை, மலையினை, அலைகின்ற கடல் நீரினை, மாலை நிலவினை, தேவர்களுக்குக் கண்கள் போன்றவனை, இந்தக் கண்ணமங்கையுள் நின்றவனை, என் கண்கள் ஆரக் கண்ணாரக் கண்டு கொண்டேன் எனப் பாடிப் பரவசமடைந்த திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*பண்ணினைப் பண்ணில் நின்றதோர் பான்மையைப்*
*பாலுள் நெய்யினை மாலுருவாய் நின்ற*
*விண்ணினை விளங்குஞ் சுடர்ச் சோதியை*
*வேள்வியை விளக்கினொளி தன்னை*
*மண்ணினை மலையை அலை நீரினை*
*மாலை மாமதியை மறையோர் தங்கள்*
*கண்ணினை கண்களாரளவும் நின்று*
*கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே.*

(தொடரும்...)

# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

## 91

ஓர் இல்லறத்தானது ஞானத்திற்கும் எல்லாம் துறக்கும் ஒரு சந்நியாசியின் ஞானத்திற்கும் மிகுந்த வித்தியாசம் உள்ளது. இல்லறத்தானின் ஞானம் ஒரு விளக்கின் ஒளியைப் போன்றது; அந்த ஒளி ஓர் அறையின் உட்பக்கத்திற்கு மட்டுமே பிரகாசம் தரும்; அந்த ஞானத்தின் துணையைக் கொண்டு அவன் தனது சொந்த உடலையும், குடும்பத்தாரையும் தவிர வேறு எதனையும் காண முடியாதவன் ஆகிறான்; ஆனால், முற்றும் துறந்த ஒரு துறவியின் ஞானமோ சூரிய ஒளியைப் போன்றது; அந்த ஒளியின் உதவியால், அறையின் உட்புறம், வெளிப்புறம் இரண்டையும் அவனால் காணமுடியும்.

## 92

சூரியனுக்குக் கீழே இப்பூமியிலே, எனது சிஷ்யன் எனப்படுபவன் ஒருவனும் தனியே இல்லை; அதற்கு மாறாக நானே ஒவ்வொருவனுக்கும் சிஷ்யன் ஆவேன்; எல்லோரும் பகவானுடைய குழந்தைகளே! எல்லோரும் பகவானுடைய அடிமைகளே; நானும் பகவானுடைய குழந்தையே; நானும் பகவானுடைய அடிமையே; அம்புலி மாமா ஒவ்வொரு குழந்தைக்கும் மாமா.

## 93

அடியார்களில் மூன்று வகை உள்ளனர்; கடைசித் தர அடியார் ஈசன் உயரே அங்கே உள்ளான் என்று உரைப்பான்; நடுத்தரமான அடியார், ஈசன் நெஞ்சில் அந்தர்யாமியாக வசிக்கிறான் என்று உரைப்பான்; ஆனால் முதல்தர அடியார் அவ்வாறெல்லாம் உரைக்க மாட்டான்; ஈசனே எல்லாமாக உள்ளான்; நாம் காணும் பொருள் அனைத்திலும் ஈசன் உள்ளான்; எல்லாம் ஈசனின் வடிவங்களே என்பான். நம்முடைய நரேந்திரனைக் கேளுங்கள், அவன் ஒரு யானையும் ஒரு சிறிய கிண்ணமும் ஒன்று தான் என்பான்.

## 94

ஒரு வீட்டின் மேற்கூரைக்கு ஏணியின் மூலமாகவோ, ஒரு மூங்கிலின் உதவியைக் கொண்டோ, மாடிப்படி வழியாகவோ, அல்லது வேறு பிற வழிகளாலோ போதல் கூடும்; அதுபோலவே, கடவுளை அடைவதற்கும் வழிகளும் பல உள்ளன; உலகத்தில் உள்ள ஒவ்வொரு மதமும் அவரை அடைவதற்கான வழிமுறைகளும் பாதைகளும் ஆகும்.

## 95

செல்வம் என்னிடம் நிரம்ப உண்டு என்று ஒருவன் பெருமை பேசுவது மூடத்தனம் ஆகும்; நீ பணக்காரன் என்றால், உன்னைவிட அதிகம் செல்வம் படைத்தவர்கள் இருக்கிறார்கள் என்பதை அறிய வேண்டும்; அஸ்தமன வேளைகளில் மின்மினிப் பூச்சிகள் தோன்றி தாம்தான் உலகத்திற்கு ஒளி கொடுப்பவை என நினைக்கின்றன; ஆனால் நட்சத்திரங்கள் உதித்த உடனேயே மின்மினிப் பூச்சிகள் வெட்கமடைந்து மங்கிப் போய்விடுகின்றன; அதே போல, சந்திரன் தோன்றியவுடனேயே மின்மினிகள் வெட்கம் அடைகின்றன. ஆனால் சூரியன் தோன்றிய உடனே எல்லாம் அடங்கிவிடுன்றன; அதே போலத் தான், தங்களைப் பற்றியே யாரும் நினைத்து நினைத்துப் பெருமை பேசிக் கொண்டு திரியக் கூடாது.

## 96

ஒரு துடைப்பமானது, தன்னளவில், சிறிது அசுத்தமானதாக இருந்தாலும், அது, தன்னால் துடைக்கப்பட்ட இடத்தைச் சுத்தமாக்கிவிடும்.

## 97

இடம், காலம் மற்றும் மனிதர்களில் வேறுபாடுகளுக்கு ஏற்ப இறைவன் பல மதங்களைத் தோற்றுவித்திருக்கிறார். எல்லா மதங்களும் பாதைகளே! எனவே மதமே கடவுள் ஆகிவிடாது. இதய பூர்வமான பக்தியுடன் ஏதேனும் ஒரு பாதையைப் பின்பற்றினால் அவரை அடைய முடியும்; ஒருவன் ஏற்றுக்கொண்ட நெறியில் எவையேனும் தவறுகள் இருக்குமானாலும், இறைவனிடம் ஒருவனுக்கு இதயபூர்வமான ஈடுபாடு மட்டும் இருக்குமானால் இறைவனே தவறுகளைத் திருத்தி அருள்வார்.

98

குடும்பத்தில் இருங்கள்; எறும்பு போல வாழுங்கள்; மணலும் சர்க்கரையும் கலந்து கிடக்கும் நிலையில், எறும்பு சர்க்கரையை மட்டுமே எடுத்துக் கொள்கிறது; தண்ணீரும் பாலும் கலந்திருக்கும் நிலையில், அன்னப்பறவை பாலை எடுத்துக் கொண்டு தண்ணீரை விலக்கி வாழ்கிறது; மீன் சேற்றுக்குள் வாழ்கிறது; ஆனால் சேற்றைத் தள்ளி விடுகிறது. இவ்வாறு குடும்பத்தில் இருக்கும் குடும்பஸ்தர்கள் எறும்பு போல அன்னம் போல மீன் போலத் தள்ளுவனவற்றைத் தள்ளி வாழலாம்.

99

மண் பாண்டம் செய்யும் தொழிலாளி ஒருவன் வெயிலில் பானைகளைக் காய வைக்கிறான்; அவற்றில் சுட்ட பானைகளும் பச்சைப் பானைகளும் இருக்கின்றன; ஆடு, மாடுகள் அவற்றின் மீது நடக்க நேர்ந்தால், சில பானைகள் உடைந்து போகும்; சுட்ட பானைகள் உடைந்தால் அந்தத் தொழிலாளியான குயவன் அவற்றைத் தூக்கி எறிந்து விடுகிறான்; அவற்றால் அவனுக்கு எந்தப் பயனும் இல்லை; ஆனால் உடைந்து கிடக்கும் பச்சை ஈரப் பானைகளைத் திரட்டி ஒன்று சேர்க்கிறான்; பிசைத்து உருட்டி ஒன்று சேர்த்துச் சக்கரத்தில் வைத்துச் சுற்றிப் புதிய பானைகளைச் செய்து கொள்கிறான். அதாவது நாம் இறைக் காட்சி பெறும்வரை குயவனின் கையில் அகப்பட வேண்டியது தான்; அதாவது உலகத்திற்கு மீண்டும் மீண்டும் வர வேண்டியது தான்.

100

இந்து மதம், மகம்மதிய மதம், கிறித்தவ மதம் முதலிய ஒவ்வொரு மதத்தின் மார்க்கத்தையும் அநுஷ்டித்தேன்; இந்து மதத்தின் பல்வேறு பிரிவுகளாகிய சாக்தம், வைஷ்ணவம், ஸ்மார்த்தம் முதலியவற்றையும் அனுஷ்டித்தேன்; இறுதியில் நான் கண்டது என்ன? அந்த ஒரே இறைவனின் இருப்பிடம் நோக்கியே ஒவ்வொருவரும் போய்க் கொண்டிருக்கக் கண்டேன்; ஆனால் ஒவ்வொருவரும் வேறு வேறான வழிகளிலிருந்து வந்து கொண்டிருந்தார்கள்; அவ்வளவே வித்தியாசம்!

***(நிறைந்தது)***

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 13

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

மலைநாட்டுத் திவ்விய தேசங்கள் 13ல் ஒன்றான திருக்காட்கரை எனும் தலத்திற்கு நம்மை உடன் கொண்டு சென்ற மீனவனார், அப்பன் எனும் நாமம் அடைந்ததோர் ஒப்பில் திருக்காட்கரையப்பன் என மூலவரைக் காட்டிச் சேவிக்கச் சொல்லச் சேவிக்கும் நாம் வாத்சல்யத் தோடு பரந்தாமன் பக்கத்தில் வீற்றிருக்கும் தாயாரையும் சேவிக்கின்றோம்.

வைணவ வைபவத்தின்படிப் பகவானுக்கு ஆறு குணங்கள் ஆகும். அவற்றுள் தலையாய முதல் குணம் வாத்சல்யம் ஆகும். இரக்கம், பரிவு என்றபடி ஆன்மாக்களிடம் கொண்ட பிரியமே வாத்சல்யமாகும். பரந்தாமனுக்குள்ள குணம் தாயாருக்கும் உண்டு என்பதால் தாயார் – பெருஞ்செல்வ நாயகியானாலும் வாத்சல்யாதேவி யாகவே திருக்காட்கரை அப்பனுக்கு உடனுறைவது பக்தர்களுக்குக் கண் கொள்ளாக் காட்சியாகும்.

தெற்கு நோக்கிய நின்ற கோலத்தில் பரந்தாமன் சேவை சாதிக்கின்றார். இத்தலத்தின் பெயரே புதுவகையானதாக உள்ளது.

காட்கரையப்பன் என்ற சொல்லைப் பிரித்தால் காட்கு அரை அப்பன் என்றாகும். காட்கு என்பது காண்பதற்கு அதாவது காட்சிக்கு, அரையப்பன் ஆவான் என்பதாக உள்ளான் என்பது கருத்து. அரசன் என்ற சொல் அரைசன் என இடையில் ஐகாரம் பெற்று வரும் ஓர் இலக்கணப்படிக் காட்சிக்கு எளிய அரசனாக உள்ளான் எனலாம்.

மேலும் திரு என்ற அடை மொழியால் திருக்காட்கரையப்பன் எனும் போது திருவருளுக்கு ஆட்பட்டு வணங்கும் ஆன்மாக்களுக்கு அரசனாகக் காட்சி நல்கிப் பலாபலன் தரத்தக்கவன் என்ற கருத்து ஆழத்துடன் பொருள் விளக்கம் உடைய பரந்தாமனே திருக்காட் கரையப்பனாய் உள்ளான் எனலாம்.

இந்தக் கருத்தையே இத்தலத்தை உள் வாங்கி மங்களா சாசனம் செய்யும் நம்மாழ்வார்,

*காட்கரை ஏத்தும் அதனுள் கண்ணா என்னும்*
*வேட்கை நோய் கூர நினைந்து கரைந்துகும்*
*ஆட்கொள்வான் ஒத்து என் உயிருண்ட மாயனால்*
*கோட்குறை பட்டது என் ஆருயிர் கோளுண்டே!*

இப்படி ஆன்மாக்கள் பட்ட குறைகளைப் பரந்தாமன் தனதாக ஏற்றுக் கொண்டதால் ஆன்மா பரிசுத்தம் அடைந்ததால் அந்த ஆன்மா காட்கரை அப்பற்கு ஆளன்றேபட்டது என நன்றியுடன் கூறுவதாக நம்மாழ்வார் கூறுகிறார். சுந்தரர் அத்தா உனக்கு ஆளாயினேன், அல்லேன் எனலாமோ எனச்சிவனிடம் நன்றியுடன் கூறியதைப் போல ஈண்டுத் திருவருளுக்கு ஆட்பட்டது ஆன்மாவை வாத்சல்யத்துடன் பார்த்த பரந்தாமனைச் சேவிக்கச் செய்கிறார் மீனவர்.

அதனால் தான் அவர் (மீனவர்) எய்ப்பில் ஒரு வைப்பாய் இருந்துதவும் பெருமானைக் கண்டு தொழ எப்போதும் இப்பதியை நண்ணுமினே என ஆன்மாவின் ஈடேற்றத்திற்கான தலமாகத்தம் பரந்தாமன் பாமாலையில் (67ஆம் தலம்) அடையாளம் காட்டினார்.

இந்த அடையாளத்தோடே அதாவது காட்கரை என்ற தலத்தில் அப்பன் என்ற சிறப்புப் பெயரோடே சேவை சாதித்தது போன்ற நிலையில் பரந்தாமன் அப்பன் என்ற தனித்த திருநாமத் தோடே கிழக்கு நோக்கிய சந்நிதியாய் நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் திருமூழிக்களம் என்னும் திவ்விய திருப்பதிக்கு மீனவர் நம்மை கேரளத்தில் உள்ள ஆல் வாயிலுக்கு அழைக்கச் செல்கின்றோம்.

அங்கே கருவிருந்த துயர் நீக்கிக் காப்பாற்றும் பசுமணியை, அருகிருந்து தொழச் செய்த படி மீனவரோடே நாமும் பரந்தாமனின் பக்தியில் மூழ்குகின்றோம். இம் பரந்தாமனுக்கு ஸ்ரீ சூக்திநாதப் பெருமாள் என்ற தொரு சிறப்புப் பெயரும் உண்டு.

இந்த சூக்தி என்ற சொல், சூக்குமமாகப் பரந்தாமன் திருவருள் பாலிப்பு செய்பவன் என்பதாக மீனவர் நுட்பமாக விளக்குகிறார். அத் திருவருள் பாலிப்பு எங்ஙனம் எனில், பகைமையற்ற சகோதரத்துவத்தின் மத்தியிலும் செய்த பாவத்தை உணரும் இருதயத்திலும் பாவத்தை மன்னிக்கிற இதயத்திலும் மூழ்கி

நிலைக்களனாகத் தங்கியிருப்பவன் என்ற கருத்தால் நீர் நிலைபோல் அருள்பவன் என்பது மீனவர் தரும் விளக்கமாகும்.

மூழி என்ற சொல் குளிர்ந்த நீர்நிலை என்பது கருத்து. நீர் நிலை என்பது ஐம்பூதத்துள் ஒன்று, அதனை (நீரை) அப்பு என்பர். எனவே குளிர்ந்த அருளை ஆன்மாவிடம் நுட்பமாக அப்பும் இயல்பால் சூக்தி பெருமான் என்றும் அப்பன் என்றும் மூழிக்களப் பரந்தாமன் பெயர் பெற்றான் என்றெல்லாம் மீனவர் தொடர்ந்து கூறிய விளக்கத்தில் மூழ்கிய நாம், மதுரவேணி நாச்சியார் உடனாய பரந்தாமனை வரும் ஊழியைக்கடக்க எங்கட்கு அருள் செய் என வேண்டிய தோடு அத்திருத்தலத்தில் மங்களா சாசனம் செய்த நம்மாழ்வார் பாசுரத்தில் திளைக்கின்றோம்.

பல பறவைகளைத் தூதனுப்பிப் பரந்தாமனின் அருளை வேண்டுகிறார் நம்மாழ்வார். திருமூழிக்களத்தில் உள்ள மேகக் கூட்டங்களே! நீங்கள் போய்ப் பரந்தாமனிடம்! உன் திருமேனியை உன்னை விரும்பும் தலைவிக்குத் தரக் கூடாதா? என நினைவு படுத்துங்கள் எனத் தன்னைத் தலைவியாகப் பாவித்துக் கொண்டு நம்மாழ்வார் பாடுவது போல் நம்மை மறந்த லயத்தில் திருமூழிக் களம் கடந்து அடுத்த திவ்விய தேசத்திற்கு மீனவருடன் செல்கின்றோம்.

அந்தத் திருத்தலந் தான் திருவல்லா என்னும் திருவல்லா வாழ் - என்பதாகும், கேரள கொல்லம் - எர்ணா குளம் மார்க்கத்தில் உள்ள திருப்பதி. தாயார் செல்வத் திருக்கொழுந்து நாச்சியார் உடனாய கோலப் பிரான் என்னும் சிறப்புப் பெயருடன் திருவாழ்மார்பனாய்ச் சேவை சாதிக்கும் பரந்தாமனை அடியவரே தொழுமின் என மீனவர் காட்ட நாம் வணங்குகின்றோம். இத்தலம் திருமங்கை யாழ்வாராலும் நம்மாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்டதாகும். கலியன் வாய் ஒலியிவை கற்றுவல்லார் (திருமங்கை யாழ்வார் ஒலித்த பாசுரத்தைப் பாடுவோர்) இருநில இன்பம் காண்பர் எனக் கூறலோடு தன்னைத் தலைவியாகப் பாவித்துக் கொண்டு பாடிய நம்மாழ்வார் திருவல்லவாழ் உறையும் கோனாரை (தலைவரை)க் கூடுவது என்று கொல் என ஏங்குவது போல் பாடுவதைப் பாடி நாம் விண்ணப்பிப் போமாக என

மீனவர் நம்மை வணங்க வைத்தவாறே திருக்கடித் தானம் என்னும் திவ்விய தேசத்திற்குக் கூட்டிச் செல்லக் கோட்டயத்துக் கற்பகவல்லி உடனாய அற்புத நாராயணனை வணங்குகின்றோம். அற்புதத் தெய்வம் இதனின் மற்று உண்டோ! எனக் கருவூர்த் தேவர், கங்கை கொண்ட சோழபுரத்து ஈசனைச் சிலாகித்துக் கூறியது போல ஈண்டுத் திருக்கடித் தானத்துப் பரந்தாமன் அற்புத நாராயணனாய்ச் சேவை சாதிக்கின்றார்.

இப்பரந்தாமனுக்கு அமிருத நாராயணன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. சிவாத்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களுக் கேற்பப் பலாபலன் நல்கும் அமுத சொருபமாய் வீற்றிருப்பதால் அப்பெயர் அமைந்தது. கடி என்றால் காப்பு என்று பொருள் ஆன்மாக்களுக்குக் காப்பாக உள்ள தானம் (ஸ்தானம்) அதாவது இடம் என்பதால் திருக்கடித்தானம் எனப்பட்டது. இதைத் தான் மீனவர், இத்திருத்தலத்துப் பரந்தாமனைப் பார்த்ததும்,

*கணப்பொழுதில் தூயவராய்க் கடுந்தவங்கள் செய்வார்க்கு*
*மணிமார்பன் வீடளிக்கும் மகத்துவம் சேர் கடித்தானம் அதை*
*வணங்க வேண்டாமோ!*

என்று பாடி நம்மை வணங்க வைத்தார். இத்தலத்தின் மங்களா சாசனத்தில் நம்மாழ்வார் தம் நெஞ்சில் குடிகொண்டவன் இத்திருக் கடித்தானத்தான் என்று பாடியது சிந்தனைக்குரிய வரலாற்றுப் பதிவா கும் என்கின்றார் மீனவர்.

*கோயில் கொண்டான் தன் திருக்கடித் தானத்தை*
*கோயில் கொண்டான் அதனோடும் என் நெஞ்சம்*
*கோயில் கொள் தெய்வமெல்லாம் தொழ வைகுந்தம்*
*கோயில் கொண்ட குடக் கூத்து அம்மானே*

நம்மாழ்வார்க்குப் பலபேர்கள் உண்டு, அப்பலவற்றுள்ளும் அவருக் கமைந்த நம்மாழ்வார் என்றது பரந்தாமன் அவரை நம்மை ஆள்வார் எனக் கூறிச் சிலாகித்த தனிச் சிறப்பிற்குரியதாகும்.

பிற ஆழ்வார்கள் யாவரும் அவரவர்கள் அவதாரம் செய்த ஊர்களிலிருந்து ஆங்காங்கே உள்ள திவ்விய தேசங்கட்குச் சென்று மங்களாசாசனம் செய்தார்கள். ஆனால் சடகோபராம் நம்மாழ்வார் எந்தத் தலத்திற்கும் செல்லாமல் தாம் அவதாரம் செய்த திருநகரி

என்னும் தலத்தில் இருந்தபடியே ஞானத்தால் நோக்கிய அளவில் அந்தந்தத் தலத்துப் பெருமாளையும், தம் திருவாய் மொழியில் வைத்துப் பாடியதால் வைகுண்டத்தும் மண்ணுலகத்தும் உள்ள அந்தந்தப் பரந்தாமர்களும் ஒன்று கூடித் திருநகரிக்கு வந்து சடகோபரைக் கண்டு அருள்பாலித்ததால் ஊரும் பேரும் ஒருங்கே ஆழ்வார் திரு நகரி என்றும் நம்மாழ்வார் என்றும் பெயர் பெற்றதாக வைணவ உலகம் சிறப்பாகக் கூறும். இதன் சிறப்பை உலகிற்கு உணர்த்தவே ஒவ்வோர் ஆண்டும் வைகாசி விசாக நட்சத்திரத்தன்று (நம்மாழ்வார் அவதார நாள்) திருநகரியைச் சுற்றியுள்ள திவ்விய தேசத்துப் பரந்தாமர்கள் பல்லக்குகளில் திருநகரிக்கு உலாப் போந்து நம்மை ஆண்டவன் நம்மை ஆண்டவன் என்றே கூறி அவ் ஆழ்வாரின் பாசுரங்களில் ஆழ்ந்ததை வெளிக்காட்டிக்கொள்ளும் வைபமாக நடக்கிறது.

இத்திருத்தல வைபவம் ஓர் அரிய தத்துவத்தை உணர்த்துவதாகும். வைணவத்தில் ஆண்டவனைக் காட்டிலும் ஆச்சாரிய அடியார்களுக்கே முதலிடமாகும். அந்த வகையில் இருந்த இடத்திலிருந்தே மானசீகமாக எல்லாத் திவ்விய தேசத்தையும் அளந்ததால் ஊர் என்றால் ஆழ்வார் திரு நகரி என்றும் பேர் என்றால் நம்மாழ்வார் என்றும் பேர் பெற்றனவாம் என்க! நம்மாழ்வார் பாசுரத்தில் குறித்த வைகுந்தம் கோயில் என்றது விண்ணுலக வைகுந்தத்தை நினைவு படுத்தினாலும் குமரகுருபரர் அவதாரம் செய்த மண்ணுலக சீவைகுண்டத்தைக் குறிக்கும் அளவில் நவதிருப்பதிகளை நினைவூட்டலாய்க் குறிப்பாக அமைந்தது எனலாம்.

இவற்றை யெல்லாம் உள்ளடக்கிய வகையிலேயே மீனவரும் நம்மாழ்வார் செந்தமிழில் ஓதியநற் பாசுரத்தின் உட்பொருளாய் இலங்குபவன் கடித்தான மால் எனப் பரந்தாமன் பாமாலையில் பதிவு செய்தார்.

இங்ஙனமாகக் கடித்தானப் பரந்தாமனைச் சேவித்த நம்மைத் திருச் சிற்றாறு என்னும் திருச் செங்குன்றூருக்கு அழைத்துச் சென்ற மீனவர் இமையவர்தம் அப்பன் என்னும் பரந்தாமனை, செங்கமல வல்லியுடன் சேவிக்கச் செய்கிறார். அதுபற்றி (பரந்தாமன் மாமாலையில் 71ஆவது தலம்) அடுத்துக் காண்போமாக!

*(தொடரும்...)*

# திருக்குறள் தெளிவுரை
(ம. கார்மேகம்)

## தூது
(வேற்று வேந்தரிடம் தன் வேந்தனுக்காகச் செல்லுதல்)

1. **அன்பு உடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்து அவாம்**
**பண்பு உடைமை தூது உரைப்பான் பண்பு.**

அன்பு உடைமை - அனைவரிடத்தும் அன்பு உடையவனாகவும்; ஆன்ற குடிப்பிறத்தல் - சிறந்த குடும்பத்தில் பிறந்திருப்பதும்; வேந்து அவாம் - வேந்தன் விரும்புகின்ற; பண்பு உடைமை - பண்புகளை உடையவனாகவும்; தூது உரைப்பான் பண்பு - தூது சென்று சொல்பவனின் பண்பாக இருத்தல் வேண்டும்.

அனைவரிடத்தும் அன்புடையவனாகவும் சிறந்த குடும்பத்தில் பிறந்திருப்பவனாகவும் வேந்தன் விரும்புகின்ற பண்புகளை உடையவனாகவும் இருத்தல் தூது சென்று சொல்பவனின் பண்பாகும்.

குடிப்பிறத்தல் - ஏழாம் வேற்றுமைத் தொகை.

2. **அன்பு அறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று.**

அன்பு - அன்புடைமை; அறிவு - செய்யும் செயலில் அறிவு; ஆராய்ந்த சொல்வன்மை - சொல்லுதலில் ஆராய்ந்து தேர்ந்து சொல்கின்ற ஆற்றல்; தூது உரைப்பார்க்கு - தூது சென்று சொல்வார்க்கு; இன்றியமையாத மூன்று - தேவைப்படும் இன்றியமையாத மூன்று குணங்களாகும்.

அன்புடைமையும் செயலில் அறிவும் சொல்லுதலில் ஆராய்ந்து தேர்ந்து சொல்கின்ற ஆற்றலும் என்ற மூன்றும் தூது சென்று சொல்வார்க்கு இன்றியமையாத குணங்கள் ஆகும்.

3. **நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்**
**வென்றி வினையுரைப்பான் பண்பு.**

நூலாருள் - நூல் அறிவு மிக்கவரிடையே; நூல்வல்லன் ஆகுதல் - அந்நூல் அறிந்த வல்லவனாய் ஆகுதல்; வேலாருள் - வேல் ஏந்திய

மன்னருள்; வென்றி வினையுரைப்பான் பண்பு - தம் மன்னனுக்கு வெற்றி தருவதான வினையைச் சொல்வானுக்கு வேண்டிய பண்பு.

வேல் ஏந்திய மன்னருள் தம் மன்னனுக்கு வெற்றி தருவதான வினையைச் சொல்வானுக்கு வேண்டிய பண்பு, நூல் அறிவு மிக்கவரிடையே அந்நூல் அறிந்த வல்லவனாய் ஆகுதல் ஆகும்.

**4. அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்**
**செறிவுடையான் செல்க வினைக்கு.**

அறிவு - கூர்த்த அறிவும்; உரு - தோற்றமும்; ஆராய்ந்த கல்வி - கலந்து ஆராய்ந்த கல்விச் சிறப்பும்; இம்மூன்றன் - இந்த மூன்றனுடைய; செறிவுடையான் - நிறைந்த திட்பம் உடையான்; செல்க வினைக்கு - தூது வினைக்குச் செல்ல வேண்டும்.

கூர்த்த அறிவு, தோற்றம், கலந்து ஆராய்ந்த கல்விச் சிறப்பு என்னும் இந்த மூன்றனுடைய நிறைந்த திட்பம் உடையவன் தூது வினைக்குச் செல்ல வேண்டும்.

அறிவு உரு - எண்ணும்மை தொக்கது.

செல்க - வியங்கோள்

**5. தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி**
**நன்றி பயப்பதாம் தூது.**

தொகச் சொல்லி - வேற்றரசரிடம் சொல்ல வேண்டியவற்றைத் தொகுத்துச் சொல்லி; தூவாத நீக்கி - பொருத்த மற்றவற்றை விலக்கி; நகச் சொல்லி - மகிழும் படியாகச் சொல்லி; நன்றி பயப்பதாம் தூது - தன் அரசனுக்கு நன்மை தருவதாக அமைபவனே தூதுவன் ஆவான்.

வேற்றரசரிடம் சொல்ல வேண்டியவற்றைத் தொகுத்துச் சொல்லி, பொருத்த மற்றவற்றை விலக்கி, அவர் மகிழும் படியாகச் சொல்லித் தன் அரசனுக்கு நன்மை தருவதாக அமைபவனே தூதுவன் ஆவான்.

சொல்லி, நீக்கி - வினை எச்சங்கள்.

**6. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்**
**தக்கது அறிவதாம் தூது.**

கற்று - நூல்களைக் கற்று; கண் அஞ்சான் - வேற்றான் பார்வைக்கு அஞ்சாமல்; செலச் சொல்லி - அவன் மனங்கொள்ளச் சொல்லி; காலத்தால் தக்கது - முடிக்கத் தக்க காலத்திற்கு ஏற்ற வழிமுறை; அறிவதாம் தூது - அறிந்திருப்பவனே தூதனாவான்.

நூல்களைக் கற்று வேற்றான் பார்வைக்கு அஞ்சாமல் அவன் மனம் கொள்ளச் சொல்லி முடிக்கத்தக்க காலத்திற்கு ஏற்ற வழிமுறை அறிந்திருப்பவனே தூதனாவான்.

அஞ்சான் - முற்றெச்சம்

7. கடன் அறிந்து காலம் கருதி இடன்அறிந்து
எண்ணி உரைப்பான் தலை.

கடன் அறிந்து - தான் செய்யும் கடமையை அறிந்து; காலம் கருதி - அதற்கான காலத்தை எண்ணிப் பார்த்து; இடன் அறிந்து - ஏற்ற இடத்தையும் அறிந்து; எண்ணி உரைப்பான் தலை - சொல்லும் முறைமையை ஆராய்ந்து சொல்லுபவனே சிறந்த தூதன் ஆவான்.

தான் செய்யும் கடமையை அறிந்து அதற்கான காலத்தை எண்ணிப் பார்த்து ஏற்ற இடத்தையும் அறிந்து சொல்லும் முறைமையை ஆராய்ந்து சொல்லுபவனே சிறந்த தூதன் ஆவான்.

அறிந்து, கருதி, எண்ணி - வினை எச்சங்கள்

உரைப்பான் - வினையாலணையும் பெயர்

8. தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

தூய்மை - மனம் தூய்மை ஆதல்; துணைமை - தனக்குத் துணையாய் அமைவோரின் தன்மை; துணிவுடைமை - சொல்ல வேண்டியதைச் சொல்லும் துணிவு கொண்டிருத்தல்; இம்மூன்றின் வாய்மை - இவை மூன்றோடும் கூடிய உண்மை; வழி உரைப்பான் பண்பு - மன்னன் சொன்ன வழி தூது சொல்வானின் பண்பு ஆகும்.

மனம் தூய்மை ஆதல், தனக்குத் துணையாய் அமைவோரின் தன்மை, சொல்ல வேண்டியதைச் சொல்லும் துணிவு கொண்டிருத்தல் என்னும் இவை மூன்றோடும் கூடிய உண்மையே மன்னன் சொன்ன

வழி தூது சொல்வானின் பண்பு ஆகும்.

தூய்மை, துணைமை, உடைமை, வாய்மை - பண்புப் பெயர்கள்.

**9. விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்**
**வாய்சோரா வன்க ணவன்.**

விடுமாற்றம் - தன் மன்னன் சொல்லிவிட்ட சொல்லை; வேந்தர்க்கு உரைப்பான் - வேற்று மன்னர்க்குச் சென்று சொல்லும் தூதன்; வடுமாற்றம் - குற்றம் வரும் சொற்களை; வாய்சோரா - வாய் தவறியும் சொல்லாத; வன் கணவன் - மனத் திண்மை உடையவன்;

தன் மன்னன் சொல்லிவிட்ட சொல்லை வேற்று மன்னர்க்குச் சென்று சொல்லும் தூதன் குற்றம் வரும் சொற்களை வாய்தவறியும் சொல்லாத மனத் திண்மை உடையவன் ஆதல் வேண்டும்.

விடு மாற்றம் - வினைத் தொகை

வாய்சோரா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

**10. இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு**
**உறுதி பயப்பதாம் தூது.**

இறுதி பயப்பினும் - தன் உயிருக்கு இறுதி வருவதாயினும்; எஞ்சாது - அஞ்சித் தயங்காமல்; இறைவற்கு - தன் மன்னனுக்கு; உறுதி பயப்பதாம் தூது - நன்மை தருவதாக உள்ளவற்றைச் சொல்பவனே தூதன்.

தன் உயிருக்கு இறுதி வருவதாயினும் அஞ்சித் தயங்காமல் தன் மன்னனுக்கு நன்மை தருவதாக உள்ளவற்றைச் சொல்பவனே தூதன்.

பயப்பினும் - எச்ச உம்மை

எஞ்சாது - வினை எச்சம்

*(தொடரும்...)*

---

**மடாலய நிகழ்வுகள் :**

25.12.2021 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் முனைவர். மு. பழனியம்மாள் கால்கோள் காதை குறித்து உரையாற்றினார்.

11.01.2022 அன்று மடாலயத்தில் கோலப் போட்டியும், 12.01.2022 அன்று சமத்துவப் பொங்கல் நிகழ்வும் நடைபெற்றன.

---

## மலர்க்குழல் மனைவியார்
## (ம.கார்மேகம்)

பழையாறை என்னும் ஊரில் வாழ்ந்த வணிகர் அமர்நீதி நாயனார். முல்லையந்தார் அமர்நீதி என்று திருத்தொண்டத் தொகை கூறுகிறது. அவருடைய மனைவியைத் துண்டமதி நுதலாள் என்று திருத் தொண்டர் திருவந்தாதி கூறுகிறது. திருத்தொண்டர் புராணசாரம் அவரை எழிலாரும் பொன் மனைவி என்கிறது. அத்தகைய பெண்மணி அமர்நீதி நாயனார் புராணத்தில் எந்த இடம் பெறுகிறார் என்பதை எண்ணுவது சிறப்பாகும்.

ஆடைகள் நெய்து கொடுக்கும் அமர்நீதி அடியார்களுக்குக் கோவணம் தயாரித்துப் பணம் பெறாமல் கொடுப்பது வழக்கம். அந்தத் தொண்டருக்கு நீடருள் கொடுப்பதற்காக மறைக்குலம் சார்ந்த பிரமசாரி வடிவில் வருகிறான் சிவபெருமான். தான் கொண்டு வந்த கோவணத்தைப் பாதுகாப்பாக வைக்கச் சொல்லிவிட்டு நீராடச் செல்கிறார் பிரமசாரி. அதற்குள் அறுசுவைத் திருவமுதாக்கி வைக்கிறார் அமர்நீதி என்கிறார் சேக்கிழார். திருவமுதாக்குவதில் அமர்நீதியின் மனைவிக்கும் இடம் உண்டு என்று கருத வேண்டும்.

நீராடி வந்தவர் நனைந்து வருகிறார்; தம் கோவணத்தைக் கேட்கிறார் கோவணக் கள்வர்; அவர் கொடுத்ததை அவரே மறைத்து வைத்துவிட்டார். கோவணத்தைக் காணவில்லை. அதற்கு இணையாக வேறு தருவதாக நாயனார் கூறுகிறார். பிரமசாரி ஏற்கவில்லை. தான் தண்டினில் சுற்றியவேறு கோவணத்தைத் தந்து இதற்கு இணையான எடையுள்ளதைக் கொடுக்க வேண்டும் என்கிறார்.

கோவணத்திற்கு இணையாக ஒன்றொன்றாக அளவில்லாத துணிகள், மென்துகில் பட்டு, துகில்வர்க்கம், நூல் வர்க்கம் எல்லாவற்றையும் அமர்நீதி துலாக் கோலில் இடுகிறார்; தட்டு நேராகவில்லை; வந்திருப்பவர் இறைவன் ஆயிற்றே! வேறு தனங்கள் இருப்பினும் இடச் சொல்கிறார். அமர்நீதி நல்லபொன், வெள்ளி, நவமணித் திரள், உலோகம் அனைத்தையும் தட்டில் இடுகிறார். வந்தவர் கொண்டு வந்த கோவணத்திற்கு அவை நிகராகவில்லை. அன்பிடும் தட்டும் அருளான தட்டும் நேராகவில்லை.

அமர்நீதியார் யானும் என் மனைவியும் சிறுவனும் தகுமேல் துலையில் ஏறிடப் பெறுவதுன் அருள் என்று வேண்டுகிறார். அவ்வாறு ஏறுவதற்கு மறைக்குலப் பிரமசாரி இசைவு தெரிவிக்கின்றார்.

உடனே அமர்நீதியார், புனைமலர்க்குழல் மனைவியார் தம்மொடும் புதல்வன் தன்னையும் துலாத் தட்டில் ஏற்றித் தானும் நிறைந்த அன்பினால் ஏறி அஞ்செழுத்து மந்திரத்தை ஓதினார்.

*இழைத்த அன்பினில் இறைதிரு நீற்று மெய்யடிமை*
*பிழைத்திலோம் எனில் பெருந்துலை நேர்நிற்க*

என்கிறார் அமர்நீதியார். கோவணம் கொடுத்துவந்தவர் அமர்நீதி நாயனார். ஆனால் துலாத் தட்டில் ஏற முற்படும் போது பிழைத்திலோம் எனில் என்று தம் மனைவியாரையும் மகனையும் உடன்படுத்திக் கூறுகிறார். அதனால் அமர்நீதியாரின் மனைவியும் இறையன்பில் நிறைந்து நிற்பவர் என்பதை அறியலாம்.

திருவமுதாக்குவதிலும் துலாத்தட்டில் நிற்பதிலும் பொன்பொருள் அத்தனையும் இடும்போதிலும் துணை நின்றவர் அமர்நீதி நாயனாருடைய மனைவியார். அதனால் தான் துலாத்தட்டு நேர்நின்றதும் பாகங்கொண்ட பேதையாம் உமையோடு தாமுமாய் இறைவன் காட்சி கொடுத்து அருள்புரிகிறார்.

வழுவில் அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும் முழுதும் இன்னருள் பெற்றுத் தம்முன் தொழுதிருக்கும் பேற்றினை இறைவன் அருளுகிறான் என்கிறார் சேக்கிழார். எனவே அமர்நீதியாரின் தொண்டுக்கு அவர்தம் துணைவியாரும் துணையானார் என்பதில் ஐயமில்லை. அதனால் அந்தத் துலையையே விமானமாகக் கொண்டு சிவபுரி அடைந்தனர் என்கிறார் சேக்கிழார். அனைத்துச் செல்வமும் இறைவனுக்கு உரியவை என்ற பற்றின்மை வருமானால் அவரே உயர்ந்தவர் என்பதை உணர்த்தும் புராணம் இதுவாகும். அமர்நீதியாரின் மனைவியார் மறுக்காமல் துலாக்கோலில் ஏறி நின்று நிறுவியதால் அவரும் போற்றற்குரியவரே.

## அருளாளர்கள் வழங்கிய வட்டார வழக்குச் சொற்கள்

(சித்தாந்த ரத்தினம் பா. அசோக்குமார், கடலூர்)

நமது அருளாளர்கள் அருளிச் செய்த பல்வேறு தோத்திர நூல்கள் நாம் அன்றாடம் இறைவனை ஓதி உணரப் பயன்படுகின்றன. அவ்வாறு ஓதி உணரும் அருள் நூல்களில் ஆங்காங்கே அருளாளர்கள் திருத்தல யாத்திரையாகச் செல்லும்போது தங்கி வாழ்ந்து கண்டறிந்த மக்களின் வழக்குச் சொற்களைத் தம் நூலில் பதிவு செய்து உள்ளது அவர்கள்தம் வாழ்க்கைக் குறிப்பின் ஒரு சான்றாக உள்ளது பற்றி இக்கட்டுரை சிந்திக்கிறது.

இன்றுள்ள நிலையில் மேற்கொள்ளும் தலயாத்திரைப் பயணத்தில் ஒரே நாளில் பல தலங்களைத் தரிசித்தாலும் அந்தக் காலத்தில் நடந்தே சென்று தலங்கள் தோறும் பாடியபோது அருளாளர்கள் பட்ட துன்பங்கள் சொல்லி மாளாது. இருப்பினும் இறைவனின் துணையினால் துன்பங்கள் பொறுத்துத் தலங்கள் தோறும் சென்று வழிபட்டதைப் பாடலாகப் பாடி அருளிச் செய்ததில் தரிசனம் செய்த ஊர் பற்றிய செய்திகள் முழுமையும் தந்த தகவல்களாக உள்ளதன் சிறப்பை என் என்பது?

ஊர்ப் பெயர், சுற்றுப்புறச் சூழல்கள், புராணச் செய்திகள் எல்லாம் பதிவு செய்யும் போது அவ்விடத்து மக்களோடு மக்களாக நெருங்கிப் பழகியதன் அடையாளமாக மக்களின் பேச்சு வழக்கையும் உடன் பதிவு செய்தது சிந்தைக்குப் பெருவிருந்தாக உள்ளது.

திருஞானசம்பந்தப் பெருமான் மதுரைக்கு அழைக்கப்பட்ட வகையில் எழுந்தருளியதைக் கேள்விப்பட்ட சமணர்கள் காழ்ப்பு உணர்வால் சம்பந்தர் தங்கிய திருமடத்திற்குத் தீ வைத்தனர். இதனைத் திருவாலவாய்ப் பெருமான் திருவருளால் உணர்ந்த சம்பந்தர்,

செய்யனே திருஆல வாய்மேவிய
ஐயனே அஞ்சலென் றருள்செய் எனைப்
பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்
பையவே சென்று பாண்டியற் காகவே

என விண்ணப்பித்தார். இவ்விண்ணப்பத்தில் பயன்படுத்திய பைய என்ற சொல் பாண்டி நாட்டு வட்டார வழக்குச் சொல் ஆகும்.

பைய - மெதுவாக என்பது பொருள். பாண்டிய நாட்டில் மெல்ல நட, மெதுவாகப் போ என்பதற்குப் பைய நட, பையப் போ என்பர். இந்தச் சாதாரண வழக்குச் சொல்லைச் சம்பந்தர் தம் ஞானப்பனுவலில் பதிவு செய்யும் போது அச்சொல் தெய்வீக இலக்கியத்தரம் பெற்று விடுவதைச் சேக்கிழார் பெருமான் சம்பந்தர் வரலாற்றில் விவரிக்கின்றார்.

சைவத்தைக் காப்பாற்றும் பொருட்டு மங்கையர்க்கரசியாரால் வரவழைக்கப்பட்ட சம்பந்தர் தமக்கு தீங்குத் இழைத்த சமணர்களைப் பழிவாங்க நேரிடையாகப் பாடாமல் சமணர்களுக்கு மன்னர் அனுமதி தந்தாரோ? இல்லையோ? எனத் தெரியாத நிலையில் பையவே சென்று பாண்டியற்காகவே என்றதில் ஓர் அரசியல் தரம் உள்ளதை உணருமாறு உள்ளது.

அது என்னவெனில் பொதுவாக நாட்டில் நடக்கும் எந்த ஒரு செயலுக்கும் மன்னனையே காரணம் குறிப்பர். அந்த வகையில் சம்பந்தரது பாடல் அமைந்தாலும் தம்மை அழைத்தது மங்கையர்க்கரசியாரின் சைவசமயக் காப்பின் எண்ணம் ஈடேற வேண்டியே பையவே எனப்பட்டதாம் என்பது சேக்கிழார் கருத்து. அதை

1. பாண்டிமா தேவியார் தமது பொற்பிற் பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்

2. ஆண்டகையார் குலச்சிறையார் அன்பினாலும் அரசன் பால் அபராதம் உறுதலாலும்

3. மீண்டுசிவ நெறியடையும் விதியினாலும் வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்

4. தீண்டியிடப் பேறுடையனாத லாலும் தீப்பிணியைப் பையவே செல்க என்றார்.

சேக்கிழாரின் இப்பாடலில் சம்பந்தர் தம் திருமடத்திற்குச் சமணர்கள் வைத்த தீ மன்னன் மீது விரைந்து பற்றுமாறு கூறியிருந்தால் பல தீமைகள் ஏற்பட்டிருக்கும் என்பதால் அவற்றைத் தவிர்க்கவே பைய எனப்பட்டதாகச் சேக்கிழார் கூறினார்.

1. மங்கையர்க்கரசியாரின் மாங்கல்யம் காப்பாற்றவும்

2. அமைச்சர் குலச்சிறையாரின் அன்பு மன்னன் மீது மேலும் ஓங்க வேண்டியும்

3. மன்னனின் அறியாமைக்கான சிறு தண்டனையாகவும்
4. மீண்டும் பாண்டி மண்டலம் சிவப்பேறு பெறவும்
5. சம்பந்தர் பூசும் திருநீற்றால் மன்னன் வெப்பு நோய் நீங்க வேண்டியுமான ஐந்து செயற்கரும் செய்கைகளுக்காகப் பைய எனப்பட்ட தாம்.

இப் பைய என்ற சொல்லைப் பாண்டிய நாட்டின் திருவாதவூரில் அவதரித்த மாணிக்க வாசகப் பெருமான் தம் திருவாசகத்தின் நிறைவுப் பதிகமான அச்சோ பதிகத்திலே எடுத்தாள்கிறார். மண்ணின் மைந்தர் எடுத்தாள்வதில் வியப்பொன்றும் இல்லை தானே.

1. தையலார் மையலிலே தாழ்ந்து விழக் கடவேனைப்
2. பையவே கொடுபோந்து பாசமெனும் தாழ்வுருவி
3. உய்யுநெறி காட்டுவித்திட்டு ஓங்காரத்து உட்பொருளை
4. ஐயன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே

என்று பாடி பைய என்ற சொல்லைத் தம் திருவாயால் பாடியிருக்கிறார். மெது மெதுவாகத் தன்னைப் பக்குவப்படுத்தியதை, பையவே கொடு போந்து என்றார்.

ஔவையார் பையச் சென்றால் வையம் தாங்கும் என்று கொன்றை வேந்தனில் கூறினார். தெய்வத் தமிழ் மொழி தோற்றமளித்தது பற்றிக் கூறும் தமிழ் மூதறிஞர் தஞ்சாவூர் பள்ளியகரம் திரு. நீ.கந்தசாமி பிள்ளை அவர்கள் பைய நாவை அசைத்து பழந்தமிழ் ஐயை என்றார்.

இங்ஙனம் பாண்டி நாட்டுத் தமிழ் பைய்யப் பைய்ய பிற இடங்களிலும் பரவியதைக் காணலாம். மக்களின் நாவில் தங்கும் சொல் அருளாளர்களின் பாவில் பதிவாகும் போது அதற்கான மகிமையே மகிமை எனலாம்.

இப்படிச் சம்பந்தரைப் போலவே திருநாவுக்கரசாரம் அப்பர் பெருமான் பாண்டிப் பதினான்கில் ஒன்றான திருப்புத்தூர்த் திருத்தளிநாதரைத் தரிசித்த போது பாடிய பதிகத்தில் சங்காத்தம் என்ற வட்டார வழக்குச் சொல்லைப் பயன்படுத்துவது அவர் அவ்வூர் மக்களுடன் பழகிய பழக்கத்தின் அடையாளத்தை நினைவு கூர்தலாக உள்ளது.

பாண்டி மண்டலத்தின் தென்பகுதியான திருப்புத்தூர், செட்டிநாட்டைச் சார்ந்த ஊராகும். பாண்டிய நாட்டு வழக்காற்றில் உறவே தேவையில்லை என்பதற்குச் சங்காத்தமே வேண்டாம் என்பர். தொட்டுத் தொடரும் உறவையே சங்காத்தம் என்பர். இது நட்பைக் குறிக்கும். இதை அப்பர், திருத்தளிநாதரின் பண்புகளை அடுக்கிக் கூறும் போது தங்கத்தட்டில் வைரத்தைப் பதிப்பது போலப் பதிக்கிறார்.

கருமருவு வல்வினை நோய் அகற்றினான் காண் காமருபூங் கச்சிஏகம்பத்தான்காண் பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும் பெரும் பற்றத் தண்புலியூர் மன்றாடிகாண் தருமருவு கொடைத்தடக்கை அளகைக் கோன்தன் சங்காத்தி ஆரூரில் தனியானைகாண் திருமருவு பொழில் புடைசூழ் திருப்புத்தூரில் திருத்தளியான் காண் அவன் என் சிந்தையானே.

அழகாபுரிக்கு அதிபதியான குபேரனைச் சிவபெருமான் தோழமை கொண்டதாகப் புராணம் கூறும். சங்காத்தம் என்ற சொல்லைச் செட்டிநாட்டு மக்கள் பெரிதும் பயன்படுத்துவர். செட்டிநாட்டைத் தொட்டுக் கொண்டுள்ள திருப்புத்தூரில் வழங்கிய வட்டார வழக்கை அப்பர் அப்படியே பயன்படுத்தினார்.

இப்படிக் கூறியதில் வேறு ஒரு பொருத்தமும் உள்ளதைக் கண்டு இன்புறலாம். பட்டினத்தார் வரலாற்றோடு குபேரனுக்கு ஒரு தொடர்பு உண்டு. தோழனாகிய குபேரனோடு ஒரு நாள் சிவபெருமான் வான வீதியில் உலா வந்தபோது பூலோகக் காவிரிப்பூம் பட்டினத்தைப் பார்த்ததும் குபேரனுக்கு அந்த ஊர் மீது ஏதோ ஒரு பற்று வந்துவிட்டதாம். இதனை உணர்ந்த சிவபெருமான் குபேரனையே பட்டினத்தார் மரபினராகப் பிறக்க வைத்ததாக ஒரு வரலாறு உண்டு.

அந்தத் தெய்வீகத் தொடர்பை நினைப்பிக்கும் விதமாகவும் இந்தச் சங்காத்தம் என்ற சொல்லைக் குபேரனோடு பொருந்துமாறு செட்டி நாட்டுத் திருப்புத்தூரில் பாடியது மிக மிகப் பொருத்தமாக உள்ளதன்றோ.

எனவே அருளாளர்களின் அருள் வாக்கு என்பது வட்டார வழக்கையும் பயன்படுத்திய வகையில் தெய்வத் தமிழ்த் தொண்டைப் புரிந்தார்கள் எனலாம்.

## 59. நரியைப் பரி ஆக்கியது (தொடர்ச்சி...)

குதிரைச் சேவகனாகிய கடவுள் கயிறுமாறிக் கொடுப்பதற்கு முன்பு புரவியிலக்கணங்களைப் பற்றிப் பொதுப்படையாகக் கூறினார். ஓரிக்கடும்பரிகள் ஒப்பற்ற வேகமுடையன என்றும், போர் புரியும் காலம் வந்தால் மதிலையும் தாண்டிச் செல்லும் என்றும், பலகணிவாயிலிலும் நுழைந்து செல்லும் என்றும், கொடிய பசி வந்தபோது வைக்கோல் முதலியவற்றையும் தின்னும் என்றும் சொல்லி வைத்தார். பின்னர் பாடலம், கோடகம், இவுளி, வன்னி, குதிரை, பரி, கந்துகம் ஆகிய துரக வகைகளையும் அவற்றின் இலக்கணங்களையும் இயல்புகளையும், போர் புரியும் தன்மைகளையும், கதிகளையும் மிகவும் விளக்கமாகப் புகன்றருளினார். இவ்வளவும் கூறிச் சிவபெருமான் தமது கணத்தாரின் முகத்தைப் பார்த்தார். சேவகர்கள் அனைவரும் தத்தம் குதிரைகளை வேகமாக நடத்திக் காட்டினார்கள். பாண்டிய வேந்தன் கண்டு வியந்தான். தன்னைச் சூழ்ந்தோரையும் அமைச்சரையும் பார்த்துப் பெருமகிழ்வு தெரிவித்துக் கொண்டான்.

சிவபெருமானும் தனது குதிரையை - வேதப்பரியை - இடதுசாரி வலது சாரியாகவும், வட்டமிட்டும் வேகமாக நடத்திக்காட்டினார். எல்லாம் முடிந்ததும் பாண்டியனின் முன் தமது சேவகர்களுடன் வந்து நின்றார். பின்னர் வேதப் பரிவீரர் வழுதிக்குக் குதிரைகளின் நாடுகளைப் பற்றி விவரமாகக் கூறினார். பல்வேறு இருபத்தைந்து நாடுகளிலிருந்து வந்தவை என்றும் விளக்கமாக மொழிந்தார். ஒவ்வொரு இனத்தையும் சுட்டிக்காட்டி அவற்றின் நாட்டினையும் குறிப்பிட்டுச் சொன்னார். மேற்கொண்டு குதிரைகளின் நிறங்கள் பற்றியும் அவற்றுள் அஷ்டமங்கல பஞ்சகல்யாணி வகை பற்றியும் எடுத்துரைத்ததோடு அவற்றின் சுழிகளையும் பயனையும் பற்றி விளக்கம் செய்தார். இறுதியாக உத்தமக் குதிரையின் இலக்கணத்தையும் கூறியருளினார்.

பாண்டியன் அக்குதிரைகட் கெல்லாம் அழகான கிண்கிணிமாலை, சதங்கை, சிலம்பு முதலியன அணிவித்தான். மலர்மாலை சூட்டிச் சந்தனம் இட்டான். தூபதீபம் காட்டி வழிபட்டான். வேதப்பரிவீரர் சோமசுந்தரப் பெருமானை நோக்கிக் கைகூப்பி, வழுதி வாழ்க! என வாழ்த்தி, தாம் அமர்ந்து வந்த வேதப்புரவி தவிர ஏனைய மாயக்குதிரைகள் அனைத்தையும் கயிறு மாறிப் பாண்டியன் கையில் கொடுத்தருளினார். பாண்டியன் குதிரைகளை ஏற்றுக்கொண்டு தனது சேவகர்கள் கையில் கொடுத்தான். அவர்களும் குதிரைகளை இட்டுச்சென்று அரண்மனையைச் சார்ந்த பெரிய புதிய குதிரைப் பந்தியிலே சேர்த்தார்கள்.

குதிரை வணிகராக வந்த இறைவருக்குப் பாண்டியன் வெண்பட்டாடை யொன்றைப் பரிசாகக் கொடுத்தான். பெருமானும் குதிரையிலிருந்து இறங்கியருளி அப்பட்டினை ஏற்றுத் தமது திருமுடியிலே சூட்டிக் கொண்டார். சிவபெருமானது எழுந்தருளி வந்த தன்மையைக் கண்ட கணத்தார்கள் தமக்குள்ளே வெகுண்டு பேசிக்கொண்டார்கள்.

அரிமர்த்தன பாண்டியன் ஏனைய குதிரை வீரர்களுக்கும் பல்வேறு நிறங்கள் காட்டும் பட்டாடைகளைப் பரிசாக அளித்தான். ஆடைகளை அவர்கள் ஏற்றுக்கொண்ட பின்னர் சோமசுந்தரப் பெருமான் தனது வேதக்குதிரையுடன் மறைந்தருளினார். கணநாதர் சேவகர்களும் உடன் மறைந்தனர்.

தனது இருமைக்கும் துணைசெய்து நின்ற திருவாதவூரருக்குப் பாண்டிய மன்னன் அருஞ்சிறப்புகள் பல செய்தான்; அவருக்கு விடைகொடுத்து அனுப்பிய பின்னர் மத்தியான்ன நேரத்தில் அரண்மனை சேர்ந்தான்.

மந்திரிமார்களும், குதிரைகளைக் காணவந்த ஊர் ஜனங்களும் தங்கள் தங்கள் இடம் சென்றனர்.

சோமசுந்தரப் பெருமான் தமது திருக்கோவிலை அடைந்தார். தமது திருவிளையாடல்கள் எல்லாவற்றையும் மீனாட்சியம்மையாருக்குக் கூறியருளினார்.

(தொடரும்...)

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94435 02017

## பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)
- M.A. Tamil

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!